காப்பிலே வைக்கப்பட்டிருந்தது. தேசத்தின் பொருட்டும், மார்க்கத்தின் பொருட்டும் தமக்கிருந்த பொருளெல்லாவற்றையும் இழந்த தியாகமூர்த்தி நம் மௌலானா முகமத்அலி.

பொருளிழப்பும், காப்பு வாழ்வும் மௌலானாவை அதிகாரவர்க்கத்துக்குப் பணியச் செய்யவில்லை. 1919-ம் ஆண்டில் அவரும் அவர் தமயனாரும் காப்பினின்றும் விடுதலையடைந்தனர். விடுதலை அடைந்ததும் அலிசகோதரர்கள் யாண்டுச் சென்றார்கள்? அதுபோழ்து அமிர்தசரசில் கூடியிருந்த காங்கரஸ் 'வீட்டிற்கு' நேரே போந்தார்கள். அங்கே அப்பொழுது நமது மௌலானாமுகமத்அலி நிகழ்த்திய சொற்பெருக்கில் மிடைந்தெழும்பிய வீரத்தை என்னென்று எழுதுவது? பாஞ்சாலப் படுகொலை கனன்றெரிந்த இடம் அவ்விடம்; காலமும் அக்காலம். அவ்விடத்தில் அக்காலத்தில் மௌலானாவின் வீரப்பேச்சு நெய்யாகிக் கனன்றிருந்த நெருப்பை எழுநாவிட் டெரியச்செய்தது.

பின்னே எழுந்த ஒத்துழையா இயக்கத்தில் மகாத்மா காந்திக்கு வலதுபுறமாக நின்று மௌலானா முகமத்அலி தொண்டாற்றியது புத்தம் புதிதாக நேயர்கள் நெஞ்சில் நிலைபெற்றிருக்கும். இமயம் முதல் கன்னிவரை, இரவு பகல், இடையிடை ஊண் உறக்கமுமின்றி, காற்றெனத் திரிந்து, தமது கம்பீரத் தோற்றத்தாலும், நோக்கத்தாலும், பேச்சாலும் மக்களுக்குத் தேசபக்தியை ஊட்டியவர் நம் மௌலானா முகமத்அலி. அவர் தேசத்தின் விடுதலைக்கும், கிலாபத்தின் பெயரால் மார்க்கத்துக்கும் நிகழ்த்திய தொண்டு என்றும் மறக்கற்பாலதன்று.

ஒத்துழையா இயக்கத்தின் பயனாக மௌலானா முகமத்அலி சிறை சென்று வெளிவந்த சின்னாளுக்குள் டில்லியில் விசேஷ காங்கரஸ் கூடிற்று. அப்பொழுது ஒத்துழையாதார்க்கும் சுயராஜயக்கட்சியார்க்கும் பெரும் பிணக்கு நேர்ந்திருந்தது. சுயராஜ்யக்கட்சி தமக்குப் பிடியாதிருந்தும், நாட்டிடைத் தோன்றியபிணக்கைத் தீர்க்கும்பொருட்டு மௌலானாமுகமத்அலி ஒத்துழையாதார்க்குப் பலதிறச் சமாதானங் கூறி,

விசேஷ காங்கரஸை வெற்றிபெற நடப்பித்தார். பின்னே காக்கிநாடாவில் மௌலானா முகமத்அலி தலைமையிலேயே காங்கரஸ் கூடிற்று. ஆண்டுமே புயல்கள் நாலுபக்கங்களிலும் கிளம்பின. அவைகளை மிகத திறம்பட அடக்கி, அமைதி யுண்டுபண்ணி, மௌலானா நலவழியில காங்கரஸை நடாத்தி னார்.

சுயராஜ்யக் கட்சியின் தோற்றங் காரணமாகவும், வேறு பல காரணங்களை யொட்டியும நாட்டிடை ஆங்காங்கே வகுப் புப பூசல் கனன்றெரியலாயிற்று. அக்கனலைக் கால தேச வர்த்தமான நிலைக்கேறறவண்ணம் அவ்வபபோது தணிக்க வும் மௌலானா முகமதஅலி முயன்று வநதார். நாட்டின விடு தலைக்கு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இன்றியமையாதது என்று மகாத்மா காநதி உணர்நது நடநதது போலவே, மௌலானா முகமத்அலியும் உணர்நது நடநது வநதார். இஃது அவரது இயற்கை. இடையிடை அவரது இயற்கையில தத் தளிப்பு ஏற்பட்டதற்குக் காரணங்கள் சில இருக்கலாம்.

லாகூர் காங்கரஸ் கட்டளை வழிநின்று காநதியடிகள் தொடுத்த போரில், மௌலானா முகமதஅலி கலவாது, பிரிட் டிஷ் அரசாங்கத்தார் அழைப்புக் கிணங்கி, இங்கிலாநது நோக்கினும், அவர் நெஞ்சம் நாட்டின் விடுதலையிலும், ஹிநது - முஸ்லிம் ஒற்றுமையிலும படிநது கிடநதது உண்மை. வட்ட மேஜை மகா நாட்டில் அவர் பேசிய பேச்சு அவரது மனோ நிலையைப் புலப்படுததிறறு. அவா இங்கி லாநதில 'உரிமை இநதியாவையே நோககுவேன், இல்லை யேல இஙகிலாநதிலேயே இறநது படுவேன ; அடிமை இநதி யாவை நோககேன்' என்று மொழிந்ததும, 'நாஙகள எவர் பிரதிநிதிகள் என்பது தெரியவிலலை' எனறு பகர்ந்ததும், வட்ட மேஜை மகா நாட்டில எழுநத ஹிநது - முஸ்லிம் பிணக்கைப் போக்கக் கோலிய திட்டமும அவரது மனோ நிலையை உள்ளஙகை நெல்லிக் கனியெனப் புலபபடுததுகின் றன. தேசபகதர் யாண்டிருநதா லென்ன? தேசபக்தி அவரை விடுத்து அகலாது.

மிக நெருக்கடியான வேளையில் - நோய்வாய்ப் பட்டிருந்த சமயத்தில்-மௌலானா முகமத்அலி இங்கிலாந்து நோக்கினார். அதனால் நாட்டுக்கு நலன் விளையுமென்று அவர் கருதி யிருக்கலாம். நலன் விளைவிக்கவே அவர் முயன்றார். 'உரிமை இந்தியாவைக் காணல் வேண்டும். இல்லையேல் இங்கிலாந்திலேயே உயிர் துறப்பேன்' என்று அவர் கூறியது தீர்க்க தரிசன மொழியாய் விட்டது. வட்ட மேஜைமகா நாட்டில் மௌலானா போன்றார் எத்துணை பேரிருப்பர் என்பது உலகுக்குத் தெரியும்.

மௌலானாவின் பிரிவால் இந்தியாவிற்கும், முஸ்லிம் உலகிற்கும் பெருநட்டம் நேர்ந்தது. இந்தியா, தன் விடுதலையிலே தணியாக காதல் கொண்டிருந்த ஒரு புதல்வரை - சிறந்த தேச பக்தரை - இழந்தது. முஸ்லிம் உலகம் ஒரு சமய பக்தரை - வீரரை - இழந்தது.

மௌலானா முகமதஅலி நாட்டு விடுதலை வேட்கையை எழுப்பிச் சென்றார்; அதை ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிவித்துச் சென்றார். அவ்வேட்கையை வளர்த்து, நாட்டுக்கு விடுதலை தேடி, அவர் இறுதிக் காலத்தில் மொழிந்த 'உரிமை இந்தியா'வில் வாழ முயல்வது, அவர் தொண்டுக்குத் தேசத்தார் கைம்மாறு காட்டும் நினைவுக் குறியாகும்.

கலலெல்லாம் மாணிக்கக் கல்லல்ல. மனித ரெல்லாம் மனிதரல்லர். மௌலானா முகமத்அலி மனிதப் பிறவிக்குரிய வினைகளை நிகழ்த்தினார். முகமதஅலி செல்வஞ் சிறந்த குடும்பத்தில் பிறந்தார்; தேசத்தின் பொருட்டு அச்செல்வத்தை இழந்தார்; இழந்தும் சலிப்புறாது தேசசேவை செய்தார். இத்தியாக மூர்த்தியை அகாலத்தில் இழக்க நேர்ந்தமை குறித்து எவரே வருந்தார்? மௌலானா முகமத்அலியின் பிரிவு குறித்துப் பாரத நாடே வருந்துகிறது; முஸ்லிம் உலகம் வருந்துகிறது; அவர்தம் நண்பர் உற்றார் உறவினர் வருந்துகிறார்; எல்லாரும் வருந்துகிறார்; எல்லாம் வருந்துகின்றன.

தமபியாரை இழந்த தமயனார் நிலை எவ்வாறிருக்கும ? மௌலானாமுகமத்அலியும மௌலானாஷவுக்கத்அலியும் சகோதர ஒற்றுமைக்கும நேயத்துக்கும இந்நாளில் எடுததுக காட்டாக விளங்கியவர்; ஒருயிர் ஈருடலாக வாழ்ந்தவர்; அலி சகோதரர் என்றே வழங்கப் பெற்றவர். ஒருவர் பிரிவு மற்றொருவர்க்கு எபபடியிருக்கும ?

சிங்கமுகன் இறந்துபட்ட பொழுது, சூரபன்மன் அழுத அழுகை இங்கே நினைவிற்கு வருகிறது.

'பொனனை நிலததனைப் புதல்வர்களை மஙகையரைப்
பின்னை யுளபொருளை யெலலாம் பெறலாகும
எனனை யுடைய இளையோனே இபபிறப்பில்
உனனை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே'

உடன் பிறப்பை மீண்டும பெறல் அரிது; அரிது. மௌலானாமுகமத்அலி பெறற்கரிய உடன்பிறப்பு. அவவுடன பிறப்பை இழநத பெரிய அண்ணா ஷவுக்கதஅலிககு எம மொழியால் ஆறுதல் கூறவலலேம.

மௌலானா முகமத்அலி நண்ணிய துறைகளிலெல்லாம் தாமும நண்ணி, அவர் தம வாழ்ககைக்கு உற்ற துணையாயமர்ந்த கறபுககரசியின் துயரொழிககத் தக்க மருநதும் உண்டோ? மற்றவர் படுநதுயருக்கும ஆறுதல்கூறல் இயலாது. மௌலானா முகமத்அலியின் தமயனாருக்கும், மனைவியார்க்கும், மற்றவர்க்கும் 'எல்லாம ஆண்டவன செயல்' என்று நமது மனமாரந்த அநுதாபத்தைத தெரிவிததுக் கொள்கிறோம.

மௌலானா முகமத்அலியின் இன்னுயிர் ஆண்டவன் ஒளியில அமைதி பெறுவதாக. சாந்தி! சாந்தி! சாந்தி!

(7-1-1931)

